## ॥ धन्याष्टकम् ॥

## தந்யாஷ்டகம்

(1)

तज्ज्ञानं प्रशमकरं यदिन्द्रियाणां
तज्ज्ञेयं यदुपनिषत्सुनिश्चितार्थम् ।
ते धन्या भुवि परमार्थनिश्चितेहाः
शेषास्तु भ्रमनिलये परिभ्रमन्ति ॥

தத்ஜ்ஞாநம் ப்ரசமகரம் யதிந்த்ரியாணாம்
தத்ஜ்ஞேயம் யதுபநிஷத்ஸு நிஸ்சிதார்த்தம்
தே தந்யா புவி பரமார்த்த நிஸ்சிதேஹா:
சேஷாஸ்து ப்ரமநிலயே பரிப்ரமந்தி ॥

புறக் கரணங்களை அடக்க வல்லதே நல்லுணர்வாகும். உபநிஷத்துக்களில் ஆராய்ந்து முடிவாக்கப்பட்ட பரம்பொருளே ஜ்ஞேயம் அறியத் தக்கது. அப்பரம்பொருளில் மட்டுமே முடிவாக முடிந்த நாட்டமுடையவர்களே புண்யசாலிகள். மற்றவரோ மயக்கமுற்று அலைபவர்கள்.

(2)

आदौ विजित्य विषयान्मदमोहराग –
द्वेषादिशत्रुगणमाहतयोगराज्याः ।
ज्ञात्वा मतं समनुभूय परात्मविद्या –
कान्तासुखं वनगृहे विचरन्तिधन्याः ॥

ஆதௌ விஜித்ய விஷயாந் மதமோஹராக
த்வேஷாதி சத்ருகண மாஹ்ருதயோக ராஜ்யா:
ஜ்ஞாத்வா மதம் ஸமனுபூய பராத்ம வித்யா
காந்தாஸுகம் வநக்ருஹே விசரந்தி தன்யா: ॥

முதலில் உலக விஷயங்களை வெல்வதோடு மதம், மோஹம், ராகம், த்வேஷம் முதலிய பகைவரையும் வென்று யோகம் - தியான ஸமாதி என்ற ராஜ்யத்தை தமதாக்கி, உபநிஷத்தில் கூறிய மதத்தை அறிந்து கொண்டு பரமாத்மஜ்ஞானம் என்ற இனியாளின் சுகத்தை அனுபவித்தபின் காடு என்ற வீட்டில் சஞ்சரிப்பர் புண்யசாலிகள்

(3)

त्यक्त्वा गृहे रतिमधोगतिहेतुभूता
मात्मेच्छयोपनिषदर्थरसं पिबन्तः।
वीतस्पृहा विषयभोगपदे विरक्ताः
धन्याश्चरन्ति विजनेषु विमुक्तसङ्गाः॥

த்யக்த்வா க்ருஹே ரதிமதோகதிஹேது பூதாம்
ஆத்மேச்சயா உபநிஷதர்த்த ரஸம் பிபந்த:।
வீதஸ்ப்ருஹா விஷயபோகபதே விரக்தா:
தந்யா ஸ்சரந்தி விஜநேஷு விமுக்தஸங்கா:॥

தாழ்மைக்கு காரணமான விஷயப்பற்றை வீட்டிலேயே விட்டுவிட்டு ஆத்ம வேட்கையுடன் உபநிஷத்தில் உரைத்த பரமாத்மானந்தத்தைப் பருகி, ஆசையகற்றி, விஷயங்களை அனுபவிக்கத் தூண்டும் அனைத்திலும் வெறுப்பு கொண்டு பற்றை அறவே விட்டு தன்னந்தனியே புண்யவான்கள் சஞ்சரிப்பர்.

(4)

त्यक्त्वा ममा हमिति बन्धकरे पदे द्वे
मानावमानसदृशाः समदर्शिनश्च।
कर्तारमन्यमवगम्य तदर्पितानि
कुर्वन्ति कर्मपरिपाकफलानि धन्याः॥

த்யக்த்வா மமாஹமிதி பந்கரேபதே த்வே
மாநாவமாந ஸத்ருசா: ஸமதர்சிநஸ்ச ।
கர்தார மன்ய மவகம்ய ததர்பிதாநி
குர்வந்தி கர்மபரிபாக பலாநி தந்யா: ॥

'நான்' - 'எனது' என்ற இரண்டு சொற்கள் ஸம்ஸார பந்தத்தை உண்டாக்குபவை. அவற்றை விட்டு மானம் - அவமானம், இரண்டிலும் ஒருநிலை கொள்பவராய், எல்லாம் ஸமம் என்று எண்ணுபவராய், வேறு கர்தா உண்டென தெரிந்தபின் அதன் மூலம் வந்த கர்ம வினைப் பயனை செய்பவரே புண்ய சாலிகள்.

(5)

त्यक्त्वैषणात्रयमवेक्षितमोक्षमार्गा –
भैक्षामृतेन परिकल्पितदेहयात्राः ।
ज्योतिः परात्परतरं परमात्मसंज्ञं
धन्या द्विजा रहसि हृद्यवलोकयन्ति ॥

த்யக்த்வைஷ்ணத்ரய மவேக்ஷித மோக்ஷமார்கா:
பைக்ஷாம்ருதேந பரிகல்பித தேஹ யாத்ரா: ।
ஜ்யோதி: பராத்பரதரம் பரமாத்மஸம்ஜ்ஞம்
தந்யா த்விஜா ரஹஸி ஹ்ருத்ய வலோகயந்தி ॥

ஈஷணா - ஆசை - த்ரயத்தை விட்டொழித்து, மோக்ஷ மார்க்கத்தை தேடித் தெரிந்து கொண்டபின், பிக்ஷை என்ற அம்ருதத்தை மட்டும் அருந்தி அதன் வழியே தேஹ யாத்ரை முடித்து, 'பரமாத்மா' எனப்படும் பெருஞ் ஜோதியை ஹ்ருதயத்தில் தனிமையில் காண்பவரே புண்யசாலிகள்.

(6)

नासन्न सन्न सदसन्न महन्न चाणु
न स्त्री पुमान्न च नपुंसकमेकबीजम् ।
यैर्ब्रह्म तत्समुपासितमेकचित्तै –
र्धन्या विरेजु रितरे भवपाशबद्धाः ॥

நாஸந்த ஸந்ந ஸதஸந்ந மஹந்ந சாணு
ந ஸ்த்ரீ புமான் ந ச நபும்ஸகமேகபீஜம் ।
யைர்ப்ரஹ்ம தத்ஸம முபாஸித மேகசித்தை:
தந்யா விரேஜுரிதரே பவபாச பத்தா: ॥

*ப்ரஹ்மம் இல்லாததுமில்லை - இருப்பதுமில்லை. ஸத் - அஸத் என்றுமில்லை. மஹத் என்றோ அணு என்றோ கூடப் ப்ரஹமம் இல்லை. பெண்ணும் இல்லை. ஆணுமில்லை. நபும் ஸகமும் இல்லை. அத்தகைய பிரம்மத்தை ஒரே குறிக்கோளுடன் எவர் கண்டனரோ அவரே புண்யசாலிகள், மற்றவரோ ஸம்ஸார பாசத்தால் கட்டுண்டு தவிப்பர்.*

**(7)**

अज्ञानपङ्कपरिमग्नमपेतसारं
दुःखालयं मरणजन्मजरावसक्तम् ।
संसारबन्धनमनित्यमवेक्ष्य धन्याः
ज्ञानासिना तदवशीर्यविनिश्चयन्ति ॥

அஜ்ஞான பங்க பரிமக்னம பேதஸாரம்
து:காலயம் மரணஜன்ம ஜராவஸக்தம் ।
ஸம்ஸார பந்தன மநித்ய மவேக்ஷ்ய தன்யா:
ஜ்ஞாஸிநா ததவசீர்ய விநிஸ்சயந்தி ॥

*அஜ்ஞானமாகிய சகதியில் ஆழ்த்துவதும், சிறப்பு ஏது மில்லாததும், துன்பத்தின் இருப்பிடமாயும், பிறப்பு - இறப்பு - முதுமை இவற்றுடன் உறவு கொண்டதும் ஆகிய ஸம்ஸாரம் என்ற சிறை நேர்மையற்றது எனக் கண்டு புண்யவான்கள் ஜ்ஞானம் என்ற வாளால் அதை வெட்டி வீழ்த்தி தீர்வு காண் கின்றனர்.*

(8)

शान्तैरनन्यमतिभिर्मधुरस्वभावै -
रेकत्वनिश्चितमनोभिरपेतमोहैः ।
साकं वनेषु विदितात्मपदस्वरूपैः
तद्वस्तु सम्यगनिशं विमृशन्ति धन्याः ॥

சாந்தை ரநன்யமதி பிர்மது ரஸ்வபாவை:
ஏகத்வநிஸ்சிதமனோபிரபேத மோஹை: ।
ஸாகம் வநேஷு விதிதாத்ம பதஸ்வரூபை:
தத்வஸ்து ஸம்யகநிசம் விம்ருசந்தி தந்யா: ॥

புண்யசாலிகள், அமைதி கொண்டவரும், வேறெதிலும் மனது வைக்காமல் 'ஒன்றே' என்ற நிலை கொண்டவரும், இனிய ஸ்வபாவமுடையவரும், மோஹமற்றவர்களும், 'ஆத்மா' என்றால் என்ன - எது அதன் சொரூபம் - என்றறிந்த மஹான்களோடு சேர்ந்து காட்டில் அந்த பேருண்மை வஸ்துவை ஆராய்கின்றனர்.

தன்யாஷ்டகம் முற்றுப் பெறுகிறது